14—4—1968




# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
33rd year
of Publication
14—4—1968

# யார் அந்த அறிவாளிகள் ?

— சாலை இளந்திரையன்

அண்மைக் காலமாகத் தமிழக அரசியல் மேடைகளிலே ஒரு குரல் கேட்கிறது. அரசியற் பெருந் தலைவர்கள் முதல் சாதாரண அரசியல்வாதிகள் வரை பலரும் அதையே சொல்லி வருகிறார்கள் :

'நாட்டிலே அமைதி குலைந்து வருகிறது; சட்டத்துக்கும் ஒழுங்குக்கும் மாணவர்களும் மற்றவர்களும் மதிப்பு வைக்கவில்லை. நாட்டில் உள்ள அறிவாளிகள் துணிவாக முன்வந்து, தெளிவான குரலில் மக்களுக்கு வழிகாட்டவேண்டும். அறிவாளிகள் முன்வந்தாலன்றி நாட்டின் நாகரிகத்தையும் பண்பையும் காப்பாற்ற முடியாது...!'

இந்தக் குரலைக் கேட்கின்ற மாணவர்கள் சற்றே தயங்கி நிற்கிறார்கள்; சுற்றுமுற்றும் பார்க்கிறார்கள்: 'யார் அந்த அறிவாளிகள்? அவர்கள் எங்கே இருந்து வருவார்கள் ?' என்று தன்னைத்தானே கேட்கிறது. அவர்களின் நெஞ்சம். 'இவர்கள் சொல்லுவதைப் பார்த்தால், அந்த அறிவாளிகள் என்பவர்கள் சினிமா நடிகர்களையும் அரசியல் தலைவர்களையும் விடப் பெரியவர்களாக இருப்பார்கள் போலிருக்கிறதே. அவர்கள் எங்கே இருக்கிறார்கள்? இதுவரை அவர்கள் என்ன செய்து கொண்டு இருந்தார்கள்? எப்போது தோன்றுவார்கள்?''—இப்படி எல்லாம் எண்ணி நாலா பக்கமும் விழிகளை ஓட்டுகிறது மாணவ இளைஞர் கூட்டம். காரணம், சினிமாக்காரர்களையும் அரசியல்வாதிகளையும்விடப் பெரியவர்கள் யாரும் இருப்பதாகவே அவர்களுக்குத் தெரியாது; யாரும் அவர்களுக்குச் சொன்னதுமில்லை. எனவே, இதுவரையில் வான மனிதர்களாக அவர்கள் நினைத்து வந்தவர்களே வேறு யாரையோ சுட்டிக் காட்டுவதைக் கண்டு மாணவர்கள் திகைக்கிறார்கள்.

மாணவர்கள் இருக்கட்டும்; வளர்ந்தவர்களாகிய நாமே கேட்போம்: 'அரசியல் தலைவர்கள், நாட்டில் அமைதியை நிலைநாட்டுவதற்கு யாரையோ அழைக்கிறார்களே, அவர்கள் யார்? நமக்கு விளங்கவில்லை; அடையாளம் தெரியவில்லை. அழைக்கிறவர்களுக்காவது அவர்கள் யாரை அழைக்கிறார்கள் என்பது தெரியுமோ, தெரியாதோ!

அரசியல் தலைவர்கள் இன்று திடீரென்று, 'அமைதியை நிலைநாட்ட வாருங்கள்' என்று யாரையோ அழைப்பதைப் பார்த்தால், யாரோ சிலரை அவர்கள் ஆபத்துக்கு உதவும் மூலிகைகளாக, மூலபலமாக ஒதுக்கிப் பத்திரமாக வைத்திருந்தது போலத் தெரிகிறது. ஆதலால் நாமும், 'அப்படி யாராவது இருந்தார்களா, யாரையாவது இவர்கள் போற்றிப் பேணி வைத்திருந்தார்களா'? என்று சுற்றுமுற்றும் பார்க்கிறோம்; இல்லை, யாரும் இல்லை, அப்படி யாரையுமே ஆட்சியாளர்கள் பெரியவர்களாக மதித்து வைத்திருக்கவில்லை.

கடந்த காலக் காங்கிரஸ் ஆட்சியிலும் சரி, இப்போது நடந்துவரும் தி. மு. க. ஆட்சியிலும் சரி, அரசியல்வாதிகளைவிடப் பெரியவர்கள் சமுதாயத்தில் இருப்பதாகக் காட்டப்பட்டதே இல்லை. அரசியல்வாதிகளுக்கு அப்பால், அவர்களை விடப் பெரியவர்களாக அறிஞர்கள் என்போர் இருப்பதாக, எண்ணம், சொல், செயல் என்ற எது ஒன்றாலும் அரசியல்வாதிகள் காட்டிக் கொண்டதில்லை. இது மிகக் கசப்பான உண்மை. ஆனாலும் இதுவே உண்மை; உண்மையைத் தவிர வேறு எதுவும் இல்லை இது.

அரசியல் மேடைகளில் பேச்சுக் கேட்கிறோம்; அவர்களின் கட்சி ஏடுகளில் எழுத்துப் படிக்கிறோம்: எந்த இடத்திலும், தங்கள் கட்சித் தலைவர்களை மேற்கோள் காட்டுகிறார்கள்; அல்லது செத்துப் போனவர்களின் கருத்துக்களை மேற்கோள் காட்டுகிறார்கள். தங்களோடு வாழும் அறிஞர்களின் கருத்துக்களை எடுத்துரைப்பதில்லை; எடுத்துரைத்தாலும், அக்கருத்துக்களுக்கு உரியவர் யார் என்று சொல்லுவதே இல்லை! இப்படி எல்லாம், இருப்பவர்களை இருட்டடிப்புச் செய்தால், இவர்களுக்குக் கருத்துத் தானம் வழங்கியவர்களும் இவர்களைவிடச் சீரிய முறையில் சிந்திப்பவர்களும் நாட்டிலே (நம்மோடேயே) இருக்கிறார்கள் என்பதை இளைஞர்கள் எப்படி உணர்வார்கள் ?

அரசியல் வாழ்வில் மட்டுமல்ல, எந்த வாழ்விலுமே எச்சரிக்கை வேண்டும். 'தாங்களே எல்லாம்' என்ற எண்ணம் யாருக்குமே இருத்தலாகாது. தங்கள் ஆற்றலுக்கும் எல்லை உண்டு என்பதை ஒவ்வொருவரும் உணரவேண்டும்; உணர்ந்து, தங்கள் ஆற்றலின் எல்லை வந்த பிறகும் பொது நலன் பேணப்படுவதற்குரிய ஒரு பாதுகாப்பை அவர்கள் உடன்வைத்திருக்கவேண்டும். 'இருசரம் இன்றி ஏகார் அமரிடை'' என்றது சுந்தரத் தமிழ்.

இது நாகரிகக் காலம்; வீட்டுக்கு வீடு மின்சார விளக்கு உள்ள காலம்; ஆனாலும் ஒவ்வொரு வீட்டிலும் ஓர் அரிக்கேன் (மண்ணெண்ணெய்) விளக்கு இருக்கிறது. ஏன்? பட்டணங்களில் விறகு அடுப்பு, கரியடுப்பு, மண்ணெண்

[ 8-ம் பக்கம் பார்க்க ]

# திட்டமிட்ட கோழிப்பண்ணை

இந்தியாவில் கோழி, சேவல், புறா, வாத்து, வான்கோழி முதலான பறவைகளை இறைச்சிக்காகவும், முட்டைக்காகவும், சிலவற்றின் இறகுக்காகவும் வளர்க்கிறார்கள் இவற்றுள் மிகவும் சர்வசாதாரணமாக எங்கும் காணப்படும் கொலைக்கோழி வளர்ப்பு எல்லாத் தரத்தினர்க்கும் ஒரு நல்ல துணைத் தொழிலாகும்.

கோழி வளர்ப்புப் பற்றிய பல செய்திகளை இந்தியாவின் பழங்கால இலக்கியங்களிலும், வரலாற்று நூல்களிலும் காணமுடிகிறது. இந்தியாவும் அதனைச்சுற்றியுள்ள நாடுகளும்தான் காட்டுக் கோழிகளின் தாயகமாக இருந்திருக்க வேண்டுமென்றும், காட்டுக் கோழிகளே பின்பு வீடுகளில் வளர்க்கப்பட்டு வீட்டுப் பறவைகளாக மாற்றம் பெற்றிருக்கவேண்டுமென்றும் ஒரு கருத்தும் நிலவுகிறது. அப்படியிருந்தும் விற்பனைக்காகக் கோழி வளர்க்கும் தொழில் இந்தியாவில் இன்னும் முறையாக ஏற்படவில்லை என்றேசொல்லவேண்டும்.

இந்தியாவில் சாதரணமாக கிராமத்தவர்கள்தான் சிறுசிறு அளவில் கோழிகளை வீடுகளில் வளர்க்கிறார்கள். அவர்கள் தாங்கள் வளர்க்கும் கோழிகளின் உணவு, சுகாதாரம், இனவிருத்தி, விற்பனை முதலானவற்றில் அதிக கவனம் செலுத்துவதில்லை. கிராமத்தவர்கள் நவீன முறைகளைத் தெரிந்து அதிக கவனம் செலுத்தி இதனை நடத்தாததால் இந்தியாவில் இத்தொழிலின் வருவாய் குறைக்கவும், தொழில்களுக்கான செலவும் நோய்நொடி முதலானவற்றால் ஏற்படும் அழிவும் அதிகமாகவும் இருந்து வருகிறது. கோழிகளின் தரமும் முட்டையிடும் விகிதமும் மிகக் குறைவாக இருக்கிறது.

இந்தியாவில் சராசரி மனிதனுக்குக் கிடைக்கும் சத்துணவு எந்தநாளும் பற்றாக் குறையாக இருக்கிறது. முட்டையிலும், கோழி இறைச்சியிலும் மிக உயர்ந்த சத்துக்கள் உள்ளன. மனிதனின் உணவின் தரத்தை மிகுந்த சத்துக்களுடையதாக ஆக்கும் முயற்சியில் கோழி வளர்ப்புத் தொழிலுக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுத்தாக வேண்டும்.

இந்தியாவில் சாதாரணமாக ஏழை விவசாயிகள் ஐந்தாறு கோழிகளைத் தங்கள் வீடுகளிலேயே தன்னிச்சையாகவிட்டு வளர்க்கிறார்கள். இவர்கள் வளர்க்கும் கோழிகள் அநேகமாக நாட்டுக் கோழிகளாகத்தான் இருக்கும். கோழிகளை அடைத்து வைப்பது, அவைகளுக்கு உணவு கொடுப்பது, நிர்வாகம் ஆகிய விஷயங்களில் கிராமவாசிகள் பரம்பரையாகவுள்ள முறைகளையே கடைப்பிடிக்கிறார்கள். கோழி வளர்ப்புக்கென்று இவர்கள் தனிப்பட எந்தவித கவனமும் செலுத்துவதோ, அல்லது ஏதும் செலவு செய்வதோ அநேகமாகக் கிடையாது. கோழி முட்டைகளையும், கோழிக் குஞ்சுகளையும் விற்றுப் பெறும் சிறு தொகையை விவசாயிகள் தங்கள் குடும்பத்தில் சில்லரைச் செலவுக்காக வைத்துக்கொள்கிறார்கள். பெரிய வருமானம் எதையும் அவர்கள் இதிலிருந்து எதிர்பார்ப்பது கிடையாது. இப்படி இந்திய கிராமவாசிகள் குறைந்த கவனத்தோடும், அளவான கண்காணிப்போடும் நாட்டுக் கோழிகளை வளர்த்து வந்தபோதிலும் கிராமப் பொருளாதாரத்தில் கோழி வளர்ப்பின் முக்கியத்துவம் எந்த வகையிலும் குறைந்ததாயில்லை.

கிராமங்களில் வளர்க்கப்படும் நாட்டுக் கோழிகள் பொறுமையாக அடைகாத்துக் குஞ்சு பொறிப்பனவாகும், அதேசமயம் சுறுசுறுப்பு மிக்கனவாயும் இருக்கின்றன. கலப்பினக் கோழிகள்போல அவைகள் மிக விரைவில் நோய்க்காளாகி மடிவதில்லை. எந்தச் சூழ்நிலையையும் சமாளித்துவளர்வதற்கேற்ற தன்மைகளைப் பெற்றன போல அவைகள் இருக்கின்றன. இக்கோழிகளை நல்ல முறையில் நிருவகித்துப் போதிய நல்லுணவும், பிற வசதிகளும் கொடுத்தால் அவைகளும் அதிகமான முட்டைகளையும், சுவையான இறைச்சியையும் தரக்கூடுமென்று பரிசோதனைகளின்மூலம் கண்டறியப்பட்டிருக்கிறது. நாட்டுக் கோழிகளை அயல்நாட்டுச் சேவல்களுடன் ஜோடி சேரவிட்டு தரமுயர்ந்த கலப்பினக் கோழிகளை உண்டாக்கும் முயற்சியில் நாட்டுக் கோழிகளுக்குள்ள இயற்கையான சில நல்ல குணங்கள் அழிந்துவிடாமல் பார்த்துக் கொள்ளவேண்டும்.

கோழிமுட்டை, இறைச்சி முதலானவற்றிற்கு நாட்டில் நாளுக்குநாள் அதிகமாக ஏற்பட்டுவரும் தேவை காரணமாகவும் அரசாங்கம் அளித்துவரும் தூண்டுதல்களும், ஆதரவும் காரணமாகவும் இன்று நம் நாட்டில் கோழி வளர்ப்புத் தொழிலை மேற்கொள்ள ஏராளமானவர்கள் முன்வரத் தொடங்கியிருக்கிறார்கள். கிராமங்களிலும், நகரங்களிலும் இவர்களது எண்ணிக்கை பெருகிவருகின்ற காரணத்தால் கோழி வளர்ப்புப்பற்றிய சகல செய்திகளையும் அவர்கள் அறியும்படி செய்யவேண்டியது அவசியமாகியுள்ளது.

ஒரு கோழிப்பண்ணை வெற்றிகரமாக நடைபெறுவதற்கு நிர்வாகத்திறமை, விற்பனை வசதிகள், தொழில் அநுபவம், போதுமான முதலீடு, உயர்ந்தஜாதிக் கோழிகள் என்னும் இத்தனையும் அவசியமாகும். கோழி வளர்ப்புப்பற்றிப் போதுமான அறிவும், அநுபவமும், நிர்வாகத் திறமையும் இல்லாத காரணத்தால் பெரும்பாலான கோழிப் பண்ணைகள் தோல்வி கண்டிருக்கின்றன. போதுமான முதலீடு இல்லாததாலும், உயர்ந்தஜாதிக் கோழிகளை வளர்க்காததாலும் தோல்வியடைந்த பண்ணைகளும் பலவாகும். குறைந்தபட்ச முதலீடும், வசதிகளும் எவ்வளவு என்றுகூட அறியாமல் கோழிப் பண்ணைகளைத் தொடங்கலாகாது. முதல் இரண்டு ஆண்டுகளுக்குப் கோழிப் பண்ணையில் வருவாய் அதிகமாய் இராதாதலால் பண்ணை தொடங்கும் போதே ஒவ்வொரு அம்சத்தையும் நன்றாக யோசித்துப் போதிய முதலீட்டுடன் திட்டமிட்டுக்கொள்ள வேண்டும். அடுத்தபடியாக இடத்திற்கும், நிலைமைகளுக்கும் தகுந்தபடி எப்படிப்பட்ட கோழிகளை வளர்ப்பது என்பதிலும் மிகுந்த கருத்துச் செலுத்தித் தெரிந்தெடுத்துக்கொள்ள வேண்டும்.

பெரிய நகரங்களை அடுத்துள்ள கிராமங்களில் கோழிப்பண்ணை தொடங்குவதானால் அதிக முட்டையினக் கோழிகளைத் தெரிந்

[ 5-ம் பக்கம் பார்க்க ]

# சிவப்புநிற முக்கோணச் சின்னம்

சிவப்பு நிறத்தில் முக்கோண வடிவமாக உள்ள சின்னமொன்றை பெரிய பெரிய ஊர்கள், நகரங்கள் மற்றும் சிறிய கிராமங்கள் முதலியனவற்றிலுள்ள மருந்துவசாலைகளிலும், சுகாதார நிலையங்களிலும் சமீபகாலமாகப் பலரும் பார்த்திருக்கலாம். சமபுஜமுக்கோண வடிவத்திலுள்ள இச்சின்னத்தின் ஒரு கோணம் தரையை நோக்கி இருக்கும். இந்த முக்கோண அடையாளம் தெரிவிக்கும் செய்தி நாட்டிற்கு மிக முக்கியமானது.

கடந்த பல ஆண்டுகளாக நம் நாட்டில் நடத்தப்பட்டு வரும் குடும்பக்கட்டுப்பாடு இயக்கத்தின்சின்னமாகஇந்தச் சிவப்புநிற முக்கோண அடையாளம் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கிறது. இனி எந்த இடத்திலாவது இவ்வடையாளம் காணப்பட்டால் உடனடியாக மக்கள் ஒரு செய்தியைத் தெரிந்து கொள்வார்கள். குடும்பக்கட்டுப்பாடு சம்பந்தமான அறிவுரை, வைத்தியவசதி, கட்டுப்பாட்டுக்கான சாதனங்கள் முதலியன யாவும் அந்த அடையாளமுள்ள இடத்தில் கிடைக்கும் என்பதுதான் அது தரும் புதிய செய்தியாகும்.

மக்கள் பெருக்கத்தால் விளைந்துள்ள விபரீத விளைவுகளும், கஷ்டங்களும் இன்று நம் ஒவ்வொருவரையும் பாதித்து வருகின்றன. 1951-ம் ஆண்டில் இந்தியாவின் ஜனத்தொகை 36 கோடியாக இருந்தது. அடுத்த 10 ஆண்டுகளில் அது 36 கோடியிலிருந்து 43.90 கோடியாக உயர்ந்தது. இன்று இந்தியாவின் மக்கள் தொகை ஏறத்தாழ 52 கோடிக்கு உயர்ந்து விட்டதாக மதிப்பிடப்படுகிறது.

நம் நாட்டில் ஒவ்வொரு ஆண்டிலும் இரண்டு கோடிக்கு மேற்பட்ட குழந்தைகள் பிறக்கின்றன. இதனை வேறுவகையாகச் சொன்னால் நம் நாட்டில் ஒவ்வொரு ஆண்டும் ஆஸ்திரேலியாக் கண்டத்தில் உள்ள மொத்த ஜனத்தொகையைவிட அதிகமான எண்ணிக்கையுள்ள மக்கள் பெருகுகின்றனர். இதே விகிதத்தில் மக்கள் தொகை பெருகிக்கொண்டே போகுமானால் இன்னும் ஒரு இருபது அல்லது இருபத்தைந்து ஆண்டுகளுக்குள் இந்தியாவின் ஜனத்தொகை 100 கோடிக்குமேல் ஆகிவிடக்கூடும்.

நாம் சுதந்திரம் அடைந்த பிறகு அடைந்த முன்னேற்றங்களின் பலனை நாம் பூரணமாக உணர்ந்து அனுபவிக்க முடியாதபடி நம் ஜனத்தொகை பெருகி விட்டது. முன்னேற்றம் காண இன்னும் எவ்வளவு சாதனைகள் புரிந்தாலும் அவை அத்தனையும் இன்று பெருகிவரும் மக்கள் தொகையின் தேவைக்கு ஈடுகட்ட முடியாததாகி விடும். எனவே நம்முடைய எதிர்காலப் பிரச்சினைகளில் மக்கட்தொகைப் பெருக்கத்தைச் சமாளிப்பது குறித்த பிரச்சினையும் ஒன்றாக நிற்கிறது.

பெருகிவரும் மக்கள் தொகைக்குப் போதுமான உணவு, உடை, வீடு, கல்வி, வைத்தியவசதிகள் இத்தனையும் கொடுக்க வேண்டும். அடுத்தபடி எல்லோருக்கும் வேலை தேடித்தர வேண்டும். நம்முடைய உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு நாம் மிகப்பெரிய முயற்சிகளை எடுத்துக்கொண்டு வருகிறோம். ஆனால் நாம் செய்யும் உணவு உற்பத்தியின்வேகத்தைக் காட்டிலும் மக்கள் பிறப்பு விகிதவேகம் மிக அதிகமாக இருக்கிறது. ஆகவே நாம் எவ்வளவுதான் உற்பத்தியைப் பெருக்கினாலும் எல்லோருக்கும் உணவளிக்க முடியவில்லை என்ற பல்லவியே இறுதி முடிவாக இருக்கிறது.

நம்முடைய நாட்டில் இன்று 37 லட்சம் ஆரம்பப் பள்ளிகள் இருக்கின்றன. நாம் மேலும் மேலும் அதிகமான பள்ளிகளைத் திறந்து கொண்டே வருகிறோம். அப்படிச் செய்தும் ஆறு முதல் பதினோறு வயதுள்ள குழந்தைகளில் இன்னும் 6 கோடிப்பேர் படிக்க வசதியில்லாமல் தவிக்கிறார்கள் என்று புள்ளிவிவரங்கள் தெரிவிக்கின்றன. நம்முடைய உயர்நிலைப்பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் பல்லாயிரம் மாணவர்கள் இடம் இல்லை என்று திருப்பி அனுப்பப்படுகின்றனர். இந்த அவலநிலை அனைத்துக்கும் காரணம் இதற்கு முன் என்றுமில்லாத அளவில் மக்கள் பெருக்கம் ஏற்பட்டு வருவதுதான் என்று சொன்னால் மிகையாகாது.

இந்தியாவில் தினந்தோறும் 55,000 குழந்தைகள் பிறக்கின்றன என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. சிசு மரணம் சுமார் 5,000 என்று வைத்துக் கொண்டாலும் ஒருநாளில் 50,000குழந்தைகள் புதிதாக மக்கள் தொகையில் சேருகிறார்கள். இத்தனை குழந்தைகளையும் பராமரித்து உணவு கொடுத்து வயது வந்தபின் கல்வி அளித்து வேலை கொடுக்கவேண்டிய பொறுப்பு தேசத்தைச் சாருகிறது. இவர்களுக்கு ஆரம்பக் கல்விமட்டிலும் அளிப்பதென்றாலும் பிறக்கும் ஒவ்வொரு 50,000 குழந்தைகளுக்கும் குறைந்தது 500 புதிய பள்ளிக்கூடங்கள் வேண்டும். ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் ஆயிரம் பிள்ளைகள் படித்தால் எல்லாப்பள்ளிக்கூடங்களுக்கும் குறைந்தது 15,000 ஆசிரியர்கள் வேண்டும். இந்த மதிப்பீட்டுப்படி இன்றும் நாளையும் ஒவ்வொரு நாளும் நாம் தினமும் 500 பள்ளிக்கூடங்களைத் திறந்து 15,00 ஆசிரியர்களையும் அதில் கற்பிக்கச் சேர்த்துக்கொண்டே போக வேண்டும். இப்படித் திறந்துகொண்டேபோனால்தான் ஒவ்வொரு நாளும் பிறக்கும் 55,000 குழந்தைகளுக்கும் கல்விவசதி அளிக்கமுடியும்.

பெருகிவரும் மக்கள் தொகை சம்பந்தமாக எழும் பிரச்சினை எவ்வளவு பெரிது என்பதை உணர்த்துவதற்காக மட்டுமேமேலே உள்ள புள்ளிவிவரம் காட்டப்பட்டது. கல்வித்துறையில் எப்படியோ அதேபோலத்

[6-ம் பக்கம் பார்க்க]





| | | |
|---|---|---|
| ஒலி : 33 | ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும் | 1968 |
| இதழ் : 21 | தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே | ஏப்ரல் : 14 |


# மதுவிலக்கு

அகில இந்திய மதுவிலக்கு மாநாடு சென்னையில் நடைபெற்றுள்ளது. டாக்டர் சுசிலா நய்யார் இதற்குத் தலைமை தாங்கியிருக்கிறார்.

காந்தியடிகளின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாட விரிவான ஏற்பாடுகளை ஒவ்வொரு ராஜ்ய அரசாங்கமும் செய்து வருகின்ற காலம் இது. இந்தியாவில் ஒரே ஒரு காங்கிரஸ் ராஜ்யம்தான் முழு மதுவிலக்கை அமுல் நடத்திவருகிறது. காங்கிரஸ் அல்லாத தமிழ்நாடு காந்திஜியின் இந்தக் கொள்கையில் தீவிரமாக பற்றுக் காட்டுவது ஏனைய காங்கிரஸ் ராஜ்யங்களுக்குத் தலை குனிவை ஏற்படுத்துகின்ற அளவுக்கு உயர்வுடையதாயிருக்கிறது. என்ன நேர்ந்தாலும் மதுவிலக்கை தகர்த்தப் போவதில்லை என்று முதலமைச்சர் அண்ணாதுரை அவர்கள் அறிவித்திருப்பது பெருமைபடத் தக்கதாகும்.

அன்னிய ஆட்சியில் மதுக்கடைகளை மறியல் செய்த மக்கள் மதுவிலக்குக்காகப் போராடிப் பதவியும் பெற்ற காங்கிரஸ் ராஜ்யங்களில் மீண்டும் கள்ளுக்கடை மறியல் செய்யும் அளவுக்கு வந்திருப்பது நமது தேசீய ம்திப்புக்கே அவமானம் என்பதை இந்த மாநாடு தெளிவாகக் காட்டியிருக்கிறது.

அவசியமாயிருந்தால் பெண்கள் மீண்டும் மறியல் செய்யவும் தயாராயிருக்க வேண்டுமென்று மாநாட்டுத் தலைவி கூறியிருக்கிறார், முதலமைச்சர் அண்ணாவோ மேலும் ஒருபடி சென்று காமராஜரையும் பக்தவத்சலத்தையும் மதுவிலக்கை ரத்து செய்த ராஜ்யக்களில் கள்ளுக்கடை மறியல் செய்யவாருங்கள் என்று அழைக்கிறார்.

தமிழகத்தின் முதலமைச்சர் மதுவிலக்குக் கொள்கையில் காட்டும் உறுதியும், காங்கிரஸ் தலைவரின் சொந்த ராஜ்யமான மைசூரில் மதுவிலக்கு தளர்த்தப்பட்டிருப்பதையும் எண்ணும் போது மதுவிலக்கு என்பது ஒரு கட்சி விவகாரமல்ல வென்பதையும் மனுதாபிமானம் படைத்த ஒரு நற்செயல் என்பதையும் அது விளக்கிக் காட்டுகிறது.

காந்திஜியின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடுவதில் பிரச்சார லாபமடைய விரும்பும் காங்கிரஸ் அரசாங்கங்கள் தமிழ்நாட்டு அரசாங்கத்தின் தீவிரமான உறுதிப்பாட்டைக் கண்டாவது தங்கள் அடிப்படைக் கொள்கையில் ஏற்பட்டுள்ள தளர்ச்சிக்குத் தலைகுனிவதுடன் மதுவிலக்கில் தீவிரம் காட்டுவது புகழுக்குறியதாக இருக்கும்.

அரசியல் சட்டத்தில் மதுவிலக்குக் கொள்கைக்கு அரியாசனம் தந்துவிட்டு, நடைமுறையில் மதுவிலக்குக் கொள்கையை குப்பைத் தொட்டியில் போட்டிருக்கும் காங்கிரஸ் அரசாங்கங்கள் சிந்திக்கவேண்டும்,

# மூச்சுவிடும் இயந்திரம்

மனிதனைப் போலவே மூச்சுவிடும் இயந்திரம் ஒன்று அமெரிக்காவில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. முக்குளிப்பவர்கள், விண்வெளி விமானிகள் ஆகியோருக்குத் தேவையான புதிய மருத்துவக் கருவிகளையும் மூச்சு விடும் கருவிகளையும் சோதிக்கவும் ஆற்றலை அளவிடவும் இப்பொழுது இந்த இயந்திரம் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

இந்த இயந்திரம் நல்ல சுத்தக் காற்றை உள்ளே இழுத்துக் கொள்கிறது; கார்பன்டை ஆக்ஸைடும், ஈரமும் அதிகம் இருக்கும் காற்றை வெளியே விடுகிறது. அதாவது சாதாரண மனிதனைப் போலவே மூச்சுவிடுகிறது. ஒரு நபர் மூச்சு விடும் வேகத்திலோ 10 பேர்கள் மூச்சுவிடும் கூட்டு வேகத்திலோ மூச்சு விடத்தக்கபடி இந்த இயந்திரத்தைப் பொருத்தி அமைக்கலாம். பெருங்கடலுக் கடியில் ஆராய்ச்சி நடத்தும் விஞ்ஞானிகள், பெரிய புதிய விண்வெளிக் கப்பலின் விமானிகள் ஆகியோரின் ரத்த ஓட்டங்களைச் சோதிப்பதற்கு இது தேவை.

மருத்துவ மனையில் இருக்கும் நோயாளி எவ்வளவு ஆக்ஸிஜன் உட்கொள்கிறார் என்பதை அளவிடும் மூச்சு அளவுக் கருவிகள், இன்னும் ஆற்றலை அளக்கும் கருவிகள் ஆகியவற்றை மனிதர்களே சோதித்து வந்தனர்; அதாவது இதற்குரிய தொண்டர்கள் செய்து வந்தனர். இனி இவர்களுக்குப் பதில் இப்புதிய இயந்திரம் சோதனை செய்யும் செய்யும், 'பல்மொனரி ஸிமுலேட்டர்' என்பது இதன் பெயர்.

சாதாரண வாசல் ஒன்றின் உயரம்; அதன் இரண்டு மடங்கு அகலம், 2 அடி ஆழம் உள்ள ஒரு பெட்டி; அதற்குள் தகடுகள், கம்பிகள், ஊதற் பைகள், நெம்பு கோல்கள், உந்து தண்டுகள், குழாய்கள், மின் விசைக்கருவிகள் முதலியன நிரப்பப் பெற்றிருக்கும். இவற்றில் சில சுழலும், மேலும் கீழும் செல்லும். முன்னுக்கும் பின்னுக்கும் போகும்—அனைத்தும் மூச்சு விடுவதற்கு இசைவாக இணைந்து செயலாற்றும்.

ஒவ்வொரு மூச்சுக்குப் பிறகும் பெரும் உலோக ஒலி ஒன்றைக் கேட்கலாம்.

பெட்டிக்கு வெளியே நீட்டிக்கொண்டிருப்பது ஒரு குழாய். ஒரு அங்குல விட்டமுடையது. இதுதான் காற்றை உள்ளுக்கு இழுக்கிறது வெளியே விடுகிறது. சாதாரண மூச்சு, அசாதாரண மூச்சு எதற்கும், இரவு பகல் என்னேரமும் இந்த இயந்திரத்தைப் பயன்படுத்தலாம்.

பென்ஸில் வேனியா மாநிலத்தில் பிட்ஸ்பர்க் நகரில் இருக்கும் வெஸ்டிங் ஹவுஸ் ஆராய்ச்சி ஆய்வுக் கூடங்களின் மருத்துவப் பிரிவில் இந்த இயந்திரம் அமைக்கப்பட்டது.

## விமான உறுப்புகள் விற்பனையில் சாதனை

பிரிட்டனில் தயாரான விமான எஞ்சின்கள் மற்றும் பிற உறுப்புகளின் ஏற்றுமதி இதுவரை இல்லாத அளவு சென்ற ஆண்டு உயர்ந்துள்ளது. கடந்த ஆண்டு ஏற்றுமதியின் மதிப்பு $8\frac{3}{4}$ கோடி பவுன்களாகும். இதற்கு முன் 1961-ல்தான் ஏற்றுமதி 8.3 கோடி பவுன் அளவை எட்டி ஒரு சாதனை ஏற்படுத்தியிருந்தது. சென்ற ஆண்டு ஏற்றுமதி முந்தின சாதனையையும் மிஞ்சி, $8\frac{3}{4}$ கோடி பவுன்களாக உயர்ந்தது. பிரிட்டிஷ் விமான நிறுவனங்களின் கூட்டுக் குழு இந்த விவரங்களை லண்டனில் அறிவித்தது.

——

# வேலூர் ஆஸ்பத்திரிக்குநிதி

சென்ற ஆண்டைப் போலவே, இந்த ஆண்டும் சென்னை மாநிலத்திலுள்ள வேலூர் ஆஸ்பத்திரிக்கு உதவுவதற்காக நிதி திரட்டும்பொருட்டு லண்டனில் ஒரு கலை நிகழ்ச்சி நடைபெறும்.

மே மாதம் 2-ம் தேதி லண்டனிலுள்ள ராயல் ஆல்பர்ட் அரங்கில் கலை நிகழ்ச்சி நடைபெறும். இதில் பிரிட்டனில் பிரபலமாயுள்ள வாத்திய—இசைக் கலைஞர்கள் பங்குகொண்டு இசை நிகழ்ச்சி நடத்திக் காட்டுகிறார்கள்.

சென்ற ஆண்டு நிகழ்ச்சியில் 1250 பவுன்கள் நிதி வசூலானது. லண்டனில் உள்ள ''வேலூர் நண்பர்கள்'' பல்வேறு வகைகளில் அந்த ஆஸ்பத்திரி நிதிக்கு நன்கொடை வழங்கி வருகிறார்கள். அதில் ஒருவகைதான் ஆண்டுதோறும் நடக்கும் இந்தக் கலை நிகழ்ச்சியாகும். ஆஸ்பத்திரியில் இயங்கிவரும் ஆராய்ச்சிக் கூடங்களுக்கும், சிப்பந்திகளுக்கு கொடுக்கவும் இந்த நிதி பயன்படுகிறது.

——

[2-ம் பக்கத் தொடர்ச்சி]

தெடுத்து வளர்ப்பது அதிக லாபம் தரும். இவ்விடங்களில் இறைச்சியினங்களை விட முட்டையினங்களை வளர்ப்பதே லாபந்தருவதாயிருக்கும். விற்பனைக்கு உடனுக்குடன் அனுப்பப் போக்குவரவு வசதி அதிகமில்லாத தூரத்துக் கிராமங்களில் இறைச்சியினக் கோழிகளை வளர்ப்பது லாபம் தருவதாகும். முட்டைகள் விரைவில் கெடக்கூடியனவாதலால் அப்படிப்பட்ட இடங்களில் முட்டையினக் கோழிகளை வருவாய் கருதி வளர்க்கலாகாது.

கோழி முட்டையையோ, இறைச்சியையோ வேற்றிடங்களுக்கு அனுப்புவதென்றால் சிறிதளவு உற்பத்தி போதாது. கணிசமான அளவு பொருள்கள் வெளியிடங்களுக்கு அனுப்பப்பட்டால்தான் எல்லாச் செலவுக்கும் கட்டுபடியாகும்.

எனவே கூட்டுறவு முறையில் கோழிப்பண்ணைகளை நடத்துவதோ அல்லது கூட்டுறவு விற்பனை முறையைக் கடைப்பிடிப்பதோ இரண்டும் நல்லதாகும்.

கோழிகளைத் தேர்ந்தெடுத்தல், ஏற்ற உணவுகளை அவற்றிற்குக் கொடுத்தல், நல்ல ஜாதிச் சேவல்களுடன் பருவமறிந்து இணையவிடுதல், நோய் நொடி வராமல் நிருவகித்துக் காத்தல், பொருள்களின் விற்பனைக்கு ஏற்பாடு செய்தல் ஆகிய எல்லா நடவடிக்கைகளிலும் அறிவியல் ரீதியான முறைகளை அறிந்து கடைப்பிடித்துக் கோழிப்பண்ணைகள் நடத்தினால் நல்ல லாபம்கிடைக்கும். எந்தக் கோழிக்கு எவ்வளவு தானியம் வைக்க வேண்டும் என்பது கூட இக்காலத்தில் ஆராய்ந்தறியப்பட்டிருக்கிறது.

திட்டவட்டமாக இவற்றைத்தான் கடைப்பிடிக்க வேண்டும் என்று வரையறுக்காது போனாலும் ஏறத்தாழ நல்ல பலன் தரக்கூடிய உண்மைகள் யாதென்பது உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. அவற்றை வழிகாட்டியாக வைத்துச் சொந்த அனுபவத்தையும் சேர்த்துக்கொண்டு கோழிப்பண்ணை நடத்தினால் எத்தரத்தினரும் பெருவெற்றியும் லாபமும் அடையலாம்.

——

## ஏற்றுமதி சாதனை

சென்ற ஆண்டு கடைசி மூன்று மாதங்களில் மட்டும் இங்கிலீஷ் எலக்ட்ரிக்கம்பெனியார், 2 லட்சம் பவுன்கள் மதிப்புக்கான சாமான்களை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்துள்ளனர்.

சுரங்கங்களில் மண்தோண்டும் இயந்திரம், மற்றும் உலோக உருக்காலைகளில் உதவும் கருவிகள் விற்பனை மட்டுமே ஏற்றுமதி மதிப்பை இந்த அளவு உயர்த்தியுள்ளன. மூன்று மாதத்திற்கு இந்த அளவு ஏற்றுமதி இதுவரை இருந்ததில்லை என்றும், இது ஒரு சாதனை என்றும் கருதப்படுகிறது.

---

### திண்டிவனம் டி. மு. கோ.

S. C. 189/68

ரெங்கப்ப செட்டியார் —வாதி
கொங்கவரம்வீரம்மாள் —பிரதிவாதி

பிரதிவாதி ராமசாமிப் பிள்ளைக்கு 22—8—66 உயில் ரூபாய் 410-க்கு எழுதிக் கொடுத்த புரோ நோட்டை ரங்கப்ப செட்டியார் மேடோவர் பெற்று தாவா செய்து 18—4—68 ஈரங்கி வைக்கப்பட்டிருக்கிறது.

P. B. திருவேங்கிடாசாரியார்,
1/7731/1 வக்கீல்.

---

### திண்டிவனம் டி மு. கோ.

S. C. 123/68

கஸ்பா திண்டிவனம் கெவர்சந்து சவுக்கார் குமாரர் ரீகப்சந்து ஜெயின் —வாதி
திண்டிவனம் தாலுக்கா ஜக்காம் பேட்டை தம்புசாமி ரெட்டியார் குமாரர் கோவிந்தசாமி ரெட்டியார் —பிரதிவாதி

ஷை நம்பரில் வாதிக்கு பிரதிவாதி 1—9—65-ல் எழுதிக் கொடுத்த புரோநோட்டின் பேரில்ரூ. 343க்கு தாவா செய்து 20—4—68 தேதி ஈரங்கி வைக்கப்பட்டிருக்கிறது. அன்று கோர்ட்டில் பிரதிவாதி தன் ஆக்ஷேபணையை தெரிவிக்காவிடில் Exparteஆக தீர்மானம் செய்யப்படும் என்று அறிவிக்கப்படுகிறது.

K, ராமஸ்வாமி அய்யங்கார்,
& R. சம்பத்,
2/7732/2 அட்வகேட்ஸ்.



[3-ம் பக்கத் தொடர்ச்சி]

தான் போதிய உணவு, வைத்தியவசதி மற்றும் ஒவ்வொரு துறையிலும் பிரச்சினைகள் எழும். கடந்த பதினைந்து ஆண்டுக்காலத்தில் நம் நாட்டின் உணவு உற்பத்தி பலமடங்கு பெருகியிருக்கிறது. அப்படியிருந்தும் உணவுப் பற்றுக்குறை பெருக்கிக் கொண்டே தான் போகிறது. இதிலிருந்து மக்கள் பெருக்கவேகத்திற்கு ஏற்றபடி உணவுப் பெருக்கத்தின் வேகம் அதிகரிக்கவில்லையென்று நாம் தெரிந்துகொள்ளமுடியும்.

பெருகிவரும் மக்கள் தொகையில் எல்லோருக்கும் வேலை கிடைக்கச்செய்வதும் பெரிய பிரச்சினையாக இருந்துவருகிறது. கல்வி கற்ற இளைஞர்கள் பலர் இன்று வேலையில்லாமல் திண்டாடுகிறார்கள். உடலுரம் படைத்தவர்களுக்கும் வேலை கிடைக்கவில்லை. எல்லோருக்கும் வைத்திய வசதி அளிப்பது இன்னும் பெரிய பிரச்சினையாக இருக்கிறது.

புதிது புதிதாகக் குழந்தைகள் பிறந்து அளவின்றிப் பெருகிக்கொண்டே போனால் அத்தனைபேருக்கும் மருந்தும், வைத்திய வசதியும் எப்படிப் பெருகச் செய்வது? நாம் என்ன தான் திட்டங்கள் வகுத்து முன்னேற்றங்களை உண்டாக்கினாலும் அத்தனையும் இந்த மக்கள் பெருக்க வெடிகுண்டால் கடலில் கரைத்த பெருங்காயம்போல் ஆகிவிடுகிறது. அறிவும், உழைப்பும், ஆற்றலும் ஆகிய எல்லாமும் திரண்டாலும் இவ்வளவு வேகமாகப் பெருகும் மக்கள் தொகைக்கு வேண்டிய தேவைகளை உண்டாக்கிக் கொடுக்க முடியாது போய் விடும்.

நியாயமாக வேண்டிய தேவைகளுக்கே உற்பத்தி செய்ய இயலாதென்றால் தேவைக்குமேல் உற்பத்திசெய்து நாட்டைச் செழிக்கச் செய்வது என்ற சிந்தனைக்கு இடம் எங்கே?

வளர்ந்துவரும் மக்கள் தொகைக்கு வசதிகள் செய்துகொடுக்க முடியாதென்றால் அதற்கு மாற்றுவழிதான் என்ன? பிறப்பு விகிதத்தைக் கட்டுப்படுத்துவதும் அதன்மூலம் குடும்ப எண்ணிக்கையைக் குறைப்பதும்தான் இதற்கு மனித சக்தியால் இன்று இயன்ற பரிகாரமாகும்.

சிவப்புநிற முக்கோணச் சின்னம் இந்தச் செய்தியைத்தான் மக்கள் ஒவ்வொருக்கும் கூறுகிறது. "குழந்தைகள் பிறப்பதைக் கட்டுப்படுத்தி நிறுத்துங்கள்" என்று அது நமக்குப் பேசாமல் பேசி உணர்த்துகிறது. அப்படிக் கட்டுப்படுத்தாவிட்டால் நம்முடைய பொருளாதார நிலையையும், வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்திக் கொள்ள முடியாமல் போய்விடுமென்பதையும் அது மறைமுகமாகத் தெரிவித்து எச்சரிக்கிறது. குழந்தை பிறப்பதைக் கட்டுப்படுத்துவதற்கான வசதிகள் இங்கே உண்டு என்பதையும் அந்த அடையாளச் சின்னம் காட்டி அழைக்கிறது.

மக்கள் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தி நாட்டைச் செழிக்கச் செய்யும் வேலையை அரசாங்கம் தனியாகச் செய்யமுடியாது. மக்களின் ஒத்துழைப்பு அதற்கு மிக முக்கியத் தேவை. ஒவ்வொரு மனிதனும் குடும்பக் கட்டுப்பாட்டின் அவசியத்தை முதலில் நன்கு உணரவேண்டும். குடும்பக் கட்டுப்பாட்டுக் கொள்கையை மறந்தால் நாட்டை எதிர்நோக்கும் பயங்கரப் பிரச்சினைகள் என்னென்ன என்பதையும் அவன் தெரிந்துகொள்ள வேண்டும். இதனைத் தெரிவிப்பதற்குத்தான் இன்று நாட்டில் எத்தனையோ சமூகசேவை ஸ்தாபனங்களும், சமூக சேவையாளர்களும் தீவிரமாகப் பணிபுரிந்து வருகிறார்கள். இவர்கள் செய்யும் பணியின் நோக்கம்; அதன் முக்கியத்துவம், அதனால் விளையும் பயன் அனைத்தையும் உள்ளுக்குள்ளாக உணர்த்தும் ஒரே சின்னம் —அதுதான் சிவப்பு நிற சமபுஜ முக்கோணச் சின்னம்.

நல்ல கருஞ்சிவப்பால் தீட்டப்பட்ட இந்த சமபுஜ முக்கோணத்தின் ஒரு நுனி கீழ்நோக்கி எழுதப்பட்டு இருப்பதைக் கண்டதும் முதலில் குடும்பக்கட்டுப்பாட்டுக்கான சாதனங்கள் இங்கே கிடைக்குமென்பதை ஒருவர் உணரலாம். செந்நிறம் நிறுத்து என்பதை உணர்த்தும். நிறுத்தாவிட்டால் எல்லாம் தலைகீழாகும் என்பதை கீழ்நோக்கிய கூர்மை காட்டும் மிகவும் எளிதான இந்தச் சின்னத்தை எழுதுவது சுலபம். இதில் எந்தவிதமான எழுத்துக்களும் இல்லாததால் விரும்பிய பொருளை மறைமுகமாக இது சொல்லும்.

ஆகவே வேறு உலகநாடுகளில் இதற்கெனத் தெரிந்தெடுக்கப்பட்ட சின்னங்களைவிட இது மிக மேலானதாக இருக்கிறது. மலேசியா, பிலிப்பைன்ஸ் ஆகிய இரு நாட்டினரும் நம்முடைய வழியைப் பின்பற்றி இந்த முக்கோண அடையாளத்தையே தங்கள் நாட்டின் குடும்பக் கட்டுப்பாட்டுச் சின்னமாக வைத்துக் கொள்ளதென்று தீர்மானித்திருக்கிறார்கள். இது நாம் பெருமைப்படத்தக்க செய்தியாகும். இந்தியாவில் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு அடையாளம் சர்வதேசச் சின்னம் போல பிற வெளிநாடுகளிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது இதுவே முதல் தடவையாகும்.

---

# நிலவு மங்கை

— பாரதி நாதன்

ஆர்வத்தில் எழுந்திட்ட அழியாக் காட்சி
அழித்தாலு மழியாத அன்பின் சாட்சி
கார்கால மாலையினில் களித்தோர் நாளில்
களிப்புடனே சென்றேனே கடுகி யாங்கு
வார்த்தையிலே எழுதவொணு வனப்புக் காட்சி
வளர்பிறைதன் முடியினிலே காட்டி நின்ருள்.
மார்கழியின் முதல்நாளில் மனம் மகிழ்ந்து
மாண்பினையேக் காட்டிநின்ருள் நிலவு மங்கை!

முழுமதியின் தண்முகங்கண்(டு) இன்பம் பொங்க
மூச்சின்றி நின்றிட்டேன் முழுமை கண்டே
அழுகின்ற உள்ளமுந்தான் அஞ்சல் விட்டே
ஆர்வமுடன் விம்மியதே விட்டு விட்டு
எழுகின்ற உணர்ச்சியினை எங்கும் கொண்டே
ஏற்றமிகு மகிழ்வுடனே நின்று விட்டேன்.
பழகிவரு தோழியைப்போல் பக்கம் நின்றே
பரவசமும் கொண்டாளே நிலவு மங்கை!

மேகந்தான் மெல்லாடை போல வந்து
மெல்லியவள் முகமறைத்து மெல்ல ஏக
மோகத்தால் எழிற்கையை நீட்டி அல்லி
முகிழ்த்தாளே முகஞ்சிரிக்க புனலின் கண்ணே.
தாகத்தால் தானடந்தாள் தென்றல் கன்னி
தக்கவரைக் காணுத பெண்ணே போல
போகத்தால் இணையவரும் புதிய அன்றில்
போலவந்தாள் புவிபுகழும் நிலவு மங்கை.

நீக்கமற என் நினைவில் நீண்டு நின்றே
நிறுத்திவிட்டாள் மறையாத நிகழ்ச்சி தன்னை.
தேக்கமின்றித் தெளிவுடனே சென்ற மங்கை
தேனிலவு தந்திட்ட தெவிட்டா இன்பம்
நோக்கத்தில் நிலைத்திட்ட நீங்கா இன்பம்
நோகாது அலைத்ததுவே உள்ளந் தன்னை.
ஏக்கத்தில் நீங்கினளே உள்ளம் விம்ம
ஏங்கவே வைத்தனளே என்றும் என்னை!

Regd No. M 3398. Phone No: 2848 Shivaji Tamil Weekly 14—4—1988

[1-ம் பக்கத் தொடர்ச்சி]

ணெய் அடுப்பு என்ற எல்லைகளைத் தாண்டி, "காஸ்" அடுப்பு வந்துவிட்ட காலம் இது. ஆயினும் ஒவ்வொரு வீட்டிலும் மண்ணெண்ணெய் அடுப்பு அல்லது கரியடுப்பு ஒன்று இருந்தே வருகிறதே ஏன்?

வெளிப்பகட்டும் வேகமும் உள்ள வாழ்வில் விரைவு உண்டு; வாண வேடிக்கை போன்ற புதுமைக்கவர்ச்சி உண்டு. ஆனால், ஆபத்தும் அதிலேதான் மிகுதி; எதிர்பாராத ஏமாற்றங்களும் அதிலேதான் அதிகம். இதை நன்கு உணர்ந்து அடிப்படையானவர்களை அறிவாளிகளை எப்போதும் உடன் வைத்திருப்பதே நல்லது.

"அரசியல்வாதியும் ஆட்சியாளனும் பட்டென்று நின்றுவிடக் கூடிய மின் விளக்கு; எதிர்பாராமல் தீர்ந்துவிடக் கூடிய காஸ் அடுப்பு; ஆதலால் அவர்களே வேண்டாம்" என்று சொல்ல வரவில்லை. அவர்கள் வேண்டும்; கட்டாயம் வேண்டும். விரைவும் புதுமைத் தளிர்ப்பும் இல்லாத வாழ்க்கை பட்டமரம் அல்லவா? ஆனால், இந்த மின்மினுப்புக்களும் விரைவு அடுப்புக்களும் — முக்கியமானகட்டங்களில் முன் நிற்க வேண்டிய மண்ணெண்ணெயை மறந்துவிடக்கூடாது.

இன்று நாட்டிலே மூண்டு நிற்கும் நிலையைப் பாருங்கள்; அரசியல்வாதிகள் தங்களையே எல்லாமாகக் கொண்டு காரியம் செய்து வந்தார்கள். தங்களுக்கு "நித்திய கண்டம் பூரண ஆயுள்" என்பதை அறிந்திருந்தும், தாங்கள் பட்டென்று நின்றுவிடும் போது பயன்படக்கூடிய அறிவாளிகளை இனங்கண்டு, மக்களுக்கு அவர்களை இனங்காட்டி வைத்திருக்கவில்லை. அறிவாளி என்னும் சேமப் பொருளை (மண்ணெண்ணெய் விளக்கை) மேசையில் வைத்துப் பூசை பண்ண வேண்டியதில்லை; பழம்பொருள் தகரப்பெட்டிக்குள்ளாவது அது கிடக்க வேண்டும்;— அங்கே கிடக்கிறது என்பது வீட்டிலுள்ள எல்லோருக்கும் தெரிந்திருக்க வேண்டும். தெரிந்திருந்தால்தான், அரசியல்வாதியாகிய மின்சாரம் "பியூஸ்" ஆனதும், யாரும் ஓடிச்சென்று மண்ணெண்ணெய் விளக்கை ஏற்றி வீட்டை வெளிச்சமாக்குவார்கள்.

இதைச் செய்திருந்தார்களா நமது அரசியல்வாதிகள்? எந்த ஒரு நிலையிலாவது, தங்களின் தோல்வியின் போது சமுதாயத்தைக் கட்டிக்காக்கக் கூடிய அறிவாளிகள் நாட்டிலே இருக்கிறார்கள் என்று காட்டிக் கொண்டார்களா?

முன்பு ஆட்சியாளரும் அரசியல்வாதியும் 'பியூஸ்' ஆனபோது என்ன நடந்தது; எண்ணிப் பாருங்கள்: போலீசுக்காரன் அல்லது பட்டாளக்காரன் என்னும் 'எலெக்ட்ரீசியன்' வரும் வரை வீடு இருண்டு கிடந்தது? 'நாங்கள் இல்லாமல் வீடு இருண்டு கிடந்தாலும் பரவாயில்லை, அறிவாளி என்னும்மண்ணெண்ணெய் விளக்கை அங்கே ஏற்ற மாட்டோம்!' என்றுதானே வீம்புபண்ணினார்கள் ஆட்சியாளர்கள்; அப்படித்தானே இன்றும் பண்ணி வருகிறார்கள்?

அரசியல் தலைமை தோற்றுப் போகும்போது அறிவுத் தலைமையின்கீழ் மக்கள் ஒன்று சேரலாம் என்ற உணர்ச்சியையே நாம் இதுவரை மக்களுக்கு ஊட்டியதில்லை. அறிவாளியின் பேச்சைக்கேட்டு அதன்படி நடக்கவேண்டிய சமயங்களிலும் நாம் அவர்களை அணுகியதில்லை. நாம் அப்படி நடந்து காட்டாததால், நமது இளையவர்களும், நம்மை மீறிவிடும் போது, வேறு யாருக்கும் கட்டுப்படத் தயாராக இல்லை. நம்மைத்தான் உச்சமாக நினைத்தார்கள்; நம்மையே தாண்டிவிட்டார்கள். வேறு யாரை அவர்கள் இனி மதித்து அடங்குவார்கள்?

கொந்தளிப்பு இப்போதுதான் தொடங்கி இருக்கிறது; இந்த வழியில் நாம் இன்னும் நீண்ட தூரம் செல்ல வேண்டியுள்ளது. ஆதலால், அரசியல்வாதிகளும் ஆட்சியாளர்களும் இப்போதாவது நின்று சிந்தியுங்கள்: ஆபத்து வேளையில் உதவக்கூடிய அறிஞர்களை இனங்கண்டு, உங்களைவிட அவர்கள் பெரியவர்கள் என்று மதித்துப் போற்றுங்கள்; நீங்கள் அவர்களை மதிக்கிறீர்கள் என்பதை இளைய பரம்பரை உணருமாறு நடந்துகொள்ளுங்கள். அப்போதுதான், இளைய சமுதாயம் நீங்கள் கிழித்த கோட்டை அழித்துச் செல்லும்போது, அறிஞர்களைக் கண்டு வழி கேட்கும். அப்போதுதான் அறிஞர்களும் 'துணிவாக' வெளிவந்து 'தெளிவான' செய்தியை வழங்குவார்கள். அவர்களை மதிக்காதவர்களாக நீங்கள் ஆக்கி வைத்துள்ள இளையசமுதாயத்தின் முன்வந்து அவமானப்பட, அறிஞர்களுக்குப் பைத்தியமா, என்ன? எந்த அறிஞன்தான் தனது முத்துக்களை (அவற்றின் அருமை தெரியாத) '......' களின் முன் போடுவான்?...

அறிஞர்களுக்கு யாரும் அழைப்புவிட வேண்டியதில்லை; அவசியம் நேரும்போது அவர்களே வருவார்கள். ஆனால், அவர்கள் அறிஞர்கள் என்பது மக்களுக்கு எப்படித் தெரியும்? பெரியவர்களான அரசியல்வாதிகளல்லவா, அவர்கள் அறிவாளிகள் என்று மக்கள் உணருமாறு நடந்துகாட்ட வேண்டும்? அப்படி அரசியல்வாதிகள் இப்போதிருந்தாவது நடக்கத் துணிந்தால், இனிவரும் இருட்டடிப்புக்களின் போதாவது இளையவர்கள், அந்த விளக்கைத் தேடி எடுத்து ஏற்றி ஒளிபெறுவார்கள்...

——



தனிநபர் நல்வாழ்வே ஜனநாயகத்தின் நோக்கமாகும். அது எந்த முறையில் அமைய வேண்டும் என்பது பற்றிப் பலவாறுபேசலாம்; ஆனால், நல்வாழ்வ என்றால், இன்றியமையாத பொருளாதாரத் தேவைகள் ஓரளவு நிறைவுறப் பெற்று, அவன் இடையறுத துன்பத்தினின்று மீண்டு, தன்னுடைய படைப்புத் திறன்களை வளர்த்துக் கொள்ள வாய்ப்பளிப்பதாக இருக்கவேண்டும் என்பது உறுதி.

ஜவஹர்லால் நேரு.

Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Incuding 4 special numbers Rs. 10.